# மஹரிஷி தாயுமானர்

# Maharshi Thayumanar




சுவாமி சுத்தானந்த பாரதியார்
இயற்றியது.



அன்பு நிலயம்
இராமச்சந்திரபுரம், திருச்சி ஜில்லா
1941



உ

சிவமயம்

# மஹரிஷி தாயுமானர்

## 1. பொருள் வணக்கம்

நித்தியமாய், நிர்மலமாய், நிட்களமாய், நிராமயமாய்
நிறைவாய், நீங்காச்
சுத்தமுமாய்த் தூரமுமாய்ச் சமீபமுமாய்த் துரியநிறைச்
சுடராய், எல்லாம்
வைத்திருந்த தாரகமாய், ஆனந்த மயமாகி
மனவாக் கெட்டாச்
சித்துருவாய் நின்றவொன்றைச் சுகாரம்பப் பெருவெளியைச்
சிந்தை செய்வாம்!

இகபரமும் உயிர்க்குயிரை, யானெனதற் றவருறவை
யெந்த நாளும்,
சுகபரிபூ ரணமான நிராலம்ப கோசரத்தைத்
துரிய வாழ்வை,
அகமகிழ வருந்தேனை, முக்கனியைக் கற்கண்டை
அமிர்தை நாடி,
மொகுமொகென இருவிழிநீர் முத்திறைப்பக் கரமலர்கள்
முகிழ்த்து நிற்பாம்!

சாதிகுலம், பிறப்பிறப்புப் பந்தமுத்தி அருவுருவத்
தன்மை நாமம்
ஏதுமின்றி, யெப்பொருட்கும், எவ்விடத்தும் பிறிவறநின்
றியக்கஞ் செய்யும்,
சோதியைமாத் தூவெளியை, மனதவிழ நிறைவான
துரிய வாழ்வைத்
தீதில்பர மாம்பொருளைத் திருவருளே நினைவாகச்
சிந்தை செய்வாம்!

---

## 2. சிறுவயதிலே

பிஞ்சு வயதிலேயே, உலகின் துன்ப நாடகத்தை, இறைவன் என்னைச் சுற்றிப் பளிச்சென விளக்கினுன். எங்கே நோக்கினும், இருவினைப் போர்முழக்கம்! ஆசை யாணவ மாயாவிலாசமான உலகியல்பு இவ்வளவுதானென் றறிந்து, ஆறுவயதிலேயே மனம் அற்றுப்போயிற்று. உலகே என்முன் படலம் படலமாக விரிந்து பேசும் இயற்கை நூலானது. நான் கண்ட மனிதர் வாழ்வெல்லாம் அதன் சொற்றொடர்களாயின. "நான்" எனும் ஒன் றெழுந்து, பல வேடங்கள் புனைந்து, பலபலவான பேர், வடிவு, சாதி, சமயவாதம், உஞ்சாமி எஞ்சாமி என்னும் சண்டைகளைப் பெருக்கிப் பொதுநிலை யுண்மையை மறைக் கும் சூது அப்போதே புலப்பட்டது; மதுரை மீனுட்சி கோயிலில், சுந்தரேசர் பிராகாரத்திலுள்ள பழைய வன்னி மரத்தருகே உட்கார்ந்து பெரும்பாலும் சிந்தையிலாழ்ந்து விடுவதுண்டு. அதன் பயனாக உள்ளே ஏதோ ஓர் இன் பப்பொருள் உணர்வானது. தனிமை இனிமையாயிருந்தது. இந்த வுலகிற்கு ஓர் இறைவன் உள்ளான்; அவனைக் காண

வேண்டுமென்ற காதல் உதித்தது. வீட்டில் எந்தத் தின் பண்டங் கிடைத்தாலும் அதிற்பாதி ஏழைகளுக்குத் தந்து விடுவ துண்டு. எங்கே கதை நடந்தாலும், அறிவாளிகள் பேசினாலும் அங்கே ஒரு மூலையில் அடக்கமாயிருந்து பேச்சை உள்ளே வாங்கிக்கொண்டு மீண்டும், தனியிடம் சேர்ந்து சிந்திப்பதுண்டு. 'ஒன்று, பல, சிவன், சக்தி, உரு, அரு, அருவுரு, அருளுரு, முப்பாழ் கடந்த சூனியம், தானேதான்' என்று இவ்வாறு வாதமிடும் சமயச் சலசலப் புகளுக் கிடையே 'உண்மை எஃது?' என்று சின்னஞ் சிறு வுள்ளம் வினவிக்கொண்டே யிருக்கும். பாட்டனார் இறந்தார்; அவருடலைச் சுட்டுச் சாம்பலாக்கினர். பாட் டனாராக எனக்கு இனிய கதைகளையும், வாக்குகளையும் சொன்ன தெது? நாளை இவ்வுடலையும், இறந்தால் எரிப்பரே; ஆதலால் இவ்வுடலுக்குள் உள்ள ஏதோ வொன்றே "நான்" என்று அப்போதே புலனானது. இந்த "நான்" என்பது எஃது? என்ற விசாரணை என்னுள்ளே பலமாக நடக்கும். மணிக்கணக்காக "என்னுள் பேசுவது யார்? அதோ அவ ருள் உயிர்ப்பது யார்? நினைப்பதெது? பார்ப்பதெது?" என்ற விசாரத்திலேயே ஆழ்ந்து பித்துப் பிடித்ததுபோல் உட்கார்ந்திருப்பதுண்டு. அப்போது வீட்டு நினைவே யிராது. கண்டவர் கேலி செய்தாலும் தோன்றுவதில்லை. பள்ளிப் பாடங்கள் பள்ளிக்கூடத்துடன் சரி. அவற்றைத் தீராக் கடமையாக அங்கேயே ஊதியெறிந்துவிட்டுத் தனியாகச் சென்று உள்விசாரந்தான் செய்வது. பரதேவியிடம் "அம்மா! எனக்கு உண்மையை விளக்கு!" என்று ஓயாது முறையிடுவதுண்டு.

வீட்டிலுள்ளவர்கள், "ஏதோபோலத் திரிகிறானே இந்தப் பயல்!" என்று அடிக்கடி இடித்துரைப்

பர். ஒருநாள் இதற்கு ஏழாங்திருநாள் (மட்டையடி பூசை) நடந்தது; உடனே வழக்கம்போலக் கோயிலுக்கு ஓடினேன்: "பராசக்தி! நீயே என் அம்மா!" என்று தேவி சந்நிதிமுன் அன்று விழுந் தழுதது இன்றும் நினைவிருக்கிறது. அதற்கு முன்பே கவித்திறன் உண்டாயிற்று. சிறுசிறு பிஞ்சுக் கவிகள் வாயில் ஊறிக்கொண்டேயிருக்கும்.

---

## 3. தேவி வழிகாட்டினுள்

"பரதேவி! ஒரு வழிகாட்டு! சுற்றுலகம் வெற்றுலகம்; என்னன்பு முழுவதும் உன்னிடமே வைத்தேன். பெற்றவர்பாலும், உற்றவர்பாலும் பற்றுதலில்லை; கற்றவர் பாலும் சூதும் வாதும் பொருமையும் காண்கிறேன். தாயே! எனக்குத் தெளிந்த உண்மையை யார் வாயினின்ருவது பேசு!" என்றுருகி நின்றேன். அப்போது (இரவு 9 மணி; பட்டு நிலா வீசுகிறது) வெளியே சில பரதேசிகளின் உருக்கமான குரல் கேட்டது; ஓசையைநோக்கி ஓடினேன்:—

பாராதி பூதநீ யல்லை—உன்னிப்
பாரிந் திரியங் கரணநீ யல்லை
ஆராய்; உணர்வுநீ என்ருன்,—ஐயன்
அன்பா யுரைத்தசொல் லானந்தந் தோழி!

கடலின் மடைவிண்ட தென்ன—இரு
கண்களும் ஆனந்தக் கண்ணீர் சொரிய,
உடலும் புளகித மாக—என
துள்ளம் உருக உபாயஞ்செய் தாண்டி!

'அருளால் எவையும்பார்!' என்றான்—அத்தை
அறியாதே சுட்டியென் அறிவாலே பார்த்தேன்;
இருளான பொருள்கண்ட தல்லாற்—கண்ட
என்னையுங் கண்டிலன் என்னேடி தோழி!

ஆக்கி யளித்துத் துடைக்குந்—தொழில்
அத்தனை வைத்தும்எள் ளத்தனை யேனுந்
தாக்கற நிற்குஞ் சமர்த்தன்—உள்ள
சாக்ஷியைச் சிந்திக்கத் தக்கது தோழி!

ஆங்கென்றும் ஈங்கென்றும் உண்டோ?—சச்சி
தானந்த சோதி யகண்ட வடிவாய்
ஓங்கி நிறைந்தது கண்டாற்—பின்னர்
ஒன்றென் றிரண்டென் றுரைத்திட லாமோ?

அன்றென்றும் ஆமென்றும் உண்டோ?—உனக்
கானந்தம் வேண்டின் அறிவாகிச் சற்றே,
நின்றால் தெரியும் எனவே—மறை
நீதியெம் ஆதி நிகழ்த்தினன் தோழி!

*என்ற ஆனந்தக்களிப்பு அளவற்ற ஆறுதலுடன் உள்ளத்திற் பாய்ந்தது. பொற்றாமரைப் படிக்கட்டில் உட்கார்ந்து அன்பர் சிலர் பாடினர். அந்தக் கம்பீரமான அனுபவ வாக்கில் நான் சொக்கிப்போனேன். அதைக் கேட்கக் கேட்க என்னுள் வைராக்கியக் கனல் ஏறியது. "ஆனந்த மோனி என்னைப் பற்றிக்கொண்டு, சொல்லாத வார்த்தை சொன்னான்; கருவி கரணங்களின் சேட்டையறச் சும்மா இருத்தினான்; முன்னிலைச்சுட் டொழிந்தது; சுக முதித்தது; வேறு பற்றறத் தன்னையே உள்ளே பற்றச் சொன்னான்; மோன முத்திரை யளித்தான்; எனது இடும்புப் பேச்சை யடக்கினான்; ஆசா பிசாசைத் துரத்தினான்;*

ஐயன் தன்னடி நிழலில் என்னைக் கூட்டினன்; எனது பொய்ம்மரபைக் கெடுத்தான்; உடல் சிலிர்க்க, உள்ளங் குளிர என்னைத் தானுக்கிக்கொண்டான் "—என் தலைவன், கடவுள், அன்பருக் கன்பான மெய்யன், அருட்குரு நாதன், முத்தொழில் முதல்வன், எல்லாம் ஆக்கியும், எதிலும் தாக்கற நிற்கும் சமர்த்தன், 'அருளாற் பார்! அற்ப மதியாற் பார்த்தால் இருளேயாம்; உள்ளச் சாட்சியை உணர்! அங்கேதான் சிந்தை பிறப்பதும், இறப்பதும் இரண்டற்றிருப்பதும். உள்ளமே சிவானந்த பூமி; வெட்ட வெளி; போக்குவரவற்ற உறுதி நிலை. அதில் மெய்யறிவின்ப வொளியுள்ளது; அதைக் காண்! பிறகு ஒன்றிரண்டென்னும் விகாரம் ஒழியும். உடல் விழுவதற்குள் உள்ள பொருளையுணர்; விருப்பு வெறுப்பற்றிரு; காம வலையிற் சிக்காதே; உலகைக் கண்டு மயங்காதே!' என்றுணர்த்தி,

வந்த வரவை மறந்து—மிக்க
மாதர்பொன் பூமி மயக்கத்தில் ஆழும்
இந்த மயக்கை யறுக்க--எனக்
கெந்தைமெய்ஞ் ஞான எழில்வாள் கொடுத்தான்"

---

## 4. என் நண்பன்

இந்த ஞானமொழிகள் என் உள்ளத்தை அள்ளின; அத்தனை அமுத மொழிகளும் என்னுயிரெல்லாந் தித்திக்க உள்ளே பாய்ந்தன. "அன்னையே! வழிகாட்டினை; நின்னருள் வாழி!" என்று தாயை உள்ளுருகிச் சிந்தித்தேன். அப் பரதேசிகளுடன் அளவளாவி, அவை தாயுமானவர் பாடலென்றறிந்து, புது மண்டபத்தில் 4-அணுவிற்கு ஒரு புத்தகம் வாங்கி, அதை விடாது படித்துச் சிந்தித்து வாழ்

வின் வழிகாட்டியாகக் கொண்டேன். கீதை, தாயுமான வர்—இரண்டும், எப்போதும் என் கையிலும் நாவிலும் இருக்கும். இவற்றை எனக்கு நன்ருகப் பாடஞ்சொல்லி வாழ்விலமைக்க ஓர் அரிய துறவியின் இரகசிய உதவியும் கிடைத்தது. தாயுமானவரே எனது வாழ்வின் தெய்விக நண்பரானுர், அந்த நண்பரை நான் பிரிந்ததே யில்லே.

எண்ணரிய பிறவிதனில் மானிடப் பிறவிதான்
யாதினும் அரிதரிது காண் !
இப்பிறவி தப்பினுல் எப்பிறவி வாய்க்குமோ,
ஏதுவரு மோஅறிகி லேன்.
கண்ணகல் நிலத்துநான் உள்ளபொழு தேயருட்
ககனவட் டத்தில் நின்று
காலூன்றி நின்றுபொழி யானந்த முகிலொடு
கலந்துமதி யவச முறவே,
பண்ணுவது நன்மை ;யிந் நிலேபதியு மட்டுமே
பதியா யிருந்த தேகப்
பவுரிகுலே யாமலே கௌரிகுண் டலியாயி
† பண்ணவிதன் அருளி னுலே,
விண்ணிலவு மதியமுதம் ஒழியாது பொழியவே
வேண்டுவேன் உ.மதடிமை நான் ;
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலேபெற்ற
வித்தகச் சித்தர் கணமே !

ஆணிலே பெண்ணிலே யென்போல வொருபேதை
அகிலத்தின் மிசையுள் ளதோ ?
ஆடிய கறங்குபோல் ஓடியுழல் சிந்தையை
அடக்கியொரு கணமேனும் யான்
காணிலேன் திருவருளே ; யல்லாது மௌனியாய்க்
கண்மூடி யோடு மூச்சைக்

---

† தேவி

கட்டிக் கலாமதியை முட்டவே மூலவெங்
கனலினை யெழுப்ப நினைவும்
பூணிலேன், இற்றைநாட் கற்றதுங் கேட்டதும்
போக்கிலே போக விட்டுப்
பொய்யுலக னுயினேன். நாயினுங் கடையான
புன்மையேன் இன்ன மின்னம்
வீணிலே யலையாமல் மலையிலக் காகநீர்
வெளிப்படத் தோற்றல் வேண்டும்,
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர் கணமே!

என்று பாடிப் பாடித் துறவிகளைத் தேடுவேன்; கோயிலுக்கு வரும் பெரியாரைப் பணிவேன்; வழிபாட்டிற்கு மலர்கொய் தளிப்பேன்; அடியார்க்கு வேண்டிய தொண்டு செய்வேன். தாயுமானவர் எனக்கு அன்பை யீந்தார், அமைதி யீந்தார், அடியார்நேய மீந்தார். அவர் வாக்கே எனது ஆதி குருவானது.

---

## 5. தாயுமானச் சுடர்

உலகெலாம் தாயுமானவர் பாடலை ஓதவேண்டும். அது தமிழ் உபநிடதம். நாடோறும், தூய சிந்தையுடன், பத்துப் பாடல்களை ஓதிச் சிந்தித்து வந்தால், உள்ளந் தெளியும்; வாழ்வு ஒளிபெறும். தாயுமானவர் பாடல் அறிவொளிக் காந்தம்; அன்பின் அருவி; சிறுநெறியின்றி மனத்தை உந்தியிழுத்து அருணெறியில் திருப்பும் ஆசான். அஃது ஒரு ஞான மோகன முரளி. அதைப் பருகும் மனப் பாம்பு, சேட்டையற் றொடுங்கி, வீட்டின்பத்தை நோக்கி யெழுந்தாடும். தாயுமானவரைத் தக்கபடி உலக மொழி

களிற் பெயர்த்து வெளியிட்டால், மக்க ளனைவருக்கும் அஃது ஒப்பற்ற பொதுமறையாக விளங்கிப் பரவும். எல்லாரும் இன்புற்றிருக்க நினைப்பதுவும், எவ்வுயிரும் தன்னுயிர் போல் எண்ணியிரங்குவதும், எங்கெங்கே பார்த்தாலும் எவ்வுயிர்க்கும் அவ்வுயிராய் அங்கங்கிருக்கும் பராபரனை உள்ளறிந் தடங்குவதும் அதன் திருவுள்ளமாம். ஆறனைத்தும் புகும் கடல்போல், சமய கோடி யத்தனையுந் தொடர்ந்து புகும் வேதாந்த சித்தாந்த சமரசக்கடலே தாயுமானவர். இனிய எளிய தெள்ளமுதத் தமிழில், உயர்ந்த உண்மை யறிவை அருளிய தாயுமானவர் உலகிற்கு ஒரு புதிய பொதுநிலை வழியை விளக்கியுள்ளார். இருபாலாரும், இல்லறம், துறவறம் ஆகிய இரண்டறத்தாரும் தாயுமானவரைக் கற்கலாம். தாயுமானவரே இல்லறத்தை நன்கு போற்றிய துறவி யாவர்.

சாட்டையிற் பம்பர சாலம்போல், எலாம்
ஆட்டுவான் இறையென அறிந்து, நெஞ்சமே
தேட்டமொன் றறவருட் செயலி னிற்றியேல்,
வீட்டறந் துறவற மிரண்டு மேன்மையே.

என்பது நன்கு கடைசற்பிடித்த தாயுமான மணி வாக்காம். சமய சாரத்தைத் தன்னுள்ளடக்கிச் சமயங் கடந்து என்றுமுள்ள தூய உண்மை யறிவின்பப் பொருளுணர்வை, தேனும், பாலும், அமுதும், கனிரசமும் சீனியும் சேர்ந்து இனிக்கும் அருளொளித் தமிழாருகப் பாய்ச்சிச் சென்றார் தாயுமானவர். உலகெலாம் உள்ளப் பசியாற அவ்வருவியை அள்ளிப் பருகுக! ஆ! அஃது எவ்வளவு உயர்வான ஞானக் கைலையினின்று, மோனானந்த வெள்ளமாகப் பெருகிவந்து மாயையில் வாடும் மனிதப் பயிர் பேரின்பச் செழிப்புறப் பாய்கிறது! அதில் ஒரு கை

புசித்தால், உயிரெல்லாம் இனிக்கும். காதற் சித்திரக் கவிதையினும், அறநெறிக் கவிதை ஆயிரம் பங்கு பயனுடையது; அதனினும் அருளாளர் உள்ளத்தில் தங்கு தடையற்றெழுந்து பொங்கும் அருட் கவிதை இலட்சம் பங்கு உயர்ந்ததாம். அதுவே வேதம், உபநிடதம், கீதை போன்ற மந்திரக் கவி. தாயுமானவர் முற்றும் அழகும் அருளும் அறிவும் பொலியும் மந்திரமணிகள். காட்சியின்றிக் கற்றறிவைக்கொண்டு, சொற்களைக் கசக்கிப் பிழிந்து இயலழகைக் கெடுக்கும் பண்டித விரிவுரைகள் வேண்டா. திருப்பித் திருப்பிச் சிந்தித்துப் படித்தால், தாயுமானவர் புதுப்புதுப் பொருளைத் தரும். தாயுமானவர் வாக்கு வாழ்வுடன் இணை பிரியாதது. ஆவியின் ஆர்வத்தெழுந்த அப்பாடல்களே தாயுமானவர் வரலாறாகும்.

---

## 6. சொல்லரிய சுகம்

தாயுமானவர் எனக் களித்தது ஒரு சொல்லரிய சுகமாம்.

கண்ணார நீர்மல்கி யுள்ளநெக் குருகாத
கள்ளனே னானலு மோ,
கைகுவித் தாடியும் பாடியும் விடாமலே
கண்பனித் தாரை காட்டி,
'அண்ணா பரஞ்சோதி யப்பா வுனக்கடிமை
யா'னெனவு மேலெ ழுந்த,
அன்பாகி நாடக நடித்ததோ குறைவில்லை;
அகிலமுஞ் சிறிதறியு மேல்;
தன்னாரு நின்னதரு ளறியாத தல்லவே;
சற்றேனும் இனிதி ரங்கிச்
சாசுவத முத்திநிலை யீதென் றுணர்த்தியே
சகசநிலை தந்து, வேறான் (று)

என்றுமல் உள்ளபடி சுகமா யிருக்கவே
ஏழையேற் கருள்செய் கண்டாய் ;
இகபர மிரண்டினிலும் உயிரினுக் குயிராகி
எங்குநிறை கின்ற பொருளே !

இத்தகைய அன்பு, ஆர்வம், அருள், சகசநிலை மஹரிஷி தாயுமானவர் பாடலைப் பயின்றுநின்றவர்க் கெய்தும்.

இன்னமுது கனிபாகு கற்கண்டு சீனிதேன்
எனருசித் திட வலியவந்
தின்பங் கொடுத்தநினை யெந்நேர நின்னன்பர்
இடையரு துருகி நாடி,
உன்னிய கருத்தவிழ வுரைகுளறி யுடலெங்கும்
ஓய்ந்தயர்ந் தவச மாகி,
யுணர்வரிய பேரின்ப அநுபூதி யுணர்விலே
யுணர்வார்கள் உள்ளபடி காண்!
கன்னிகை யொருத்திசிற் றின்பம்வேம் பென்னினுங்
கைக்கொள்வள் பக்கு வத்தில்.
கணவனருள் பெறின்முன்னே சொன்னவா றென்னைக்
கருதிநகை யாவ ளதுபோல்,
சொன்னபடி கேட்குமிப் பேதைக்கு நின்னன்பு
தோற்றிற் சுகாரம்ப மாம்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுக வாரியே !

தாயுமான மஹரிஷியின் ஞானக்கனி, அன்புரசம் பொழிந்து, இவ்வாறு ஒரு சொல்லரிய சுகந் தருகிறது!

தாயுமான மஹரிஷியின் உள்ளத்தை யறிந்தால், எங்கும் தானான பரம்பொருளைக் காணும் விசுவசேதனம் (Cosmic consciousness) உண்டாகும் :—

பண்ணே னுனக்கான பூசையொரு வடிவிலே;
பாவித் திறைஞ்ச ஆங்கே,
பார்க்கின்ற மலரூடு நீயே யிருத்தியப்
பனிமல ரெடுக்க மனமும்
நண்ணேன் ;- அலாமலிரு கைதான் குவிக்கவெனில்
நாணுமென் உளம் நிற்றிநீ !
நான்கும்பி டும்போ தரைக்கும்பி டாதலால்
நான்பூசை செய்யன் முறையோ ?
விண்ணே, வினுதியாம் பூதமே, நாதமே,
வேதமே வேதாந்த மே !
மேதக்க கேள்வியே, கேள்வியாம் பூமிக்குள்
வித்தே, யவித்தின் முளையே,
கண்ணே, கருத்தேயென் எண்ணே யெழுத்தே
கதிக்கான மோன வடிவே,
கருதரிய சிற்சபையில் ஆனந்த நிர்த்தமிடு
கருணு கரக் கடவுளே !

**தாயுமானவர்** பரமாத்ம—விசுவாத்ம தரிசனம் பெற்ற மஹாயோகி, பூரணஞானி, செந்தமிழ் மகரிஷி. அவர் அறிந்தடங்கிய ஆனந்தமோனி, தூங்காமல் தூங்கிச் சுகம் பெற்ற சித்தர். **இச் சித்தர் வாழ்வை இனிக் காண்பாம்.**

அன்னைபோ லருள்மிகுத்து மன்னுஞான வரதனே,
என்னையே யெனக்களித்த நின்னையானு நினைவனே !

---

## 7. தாயுமானர் பிறப்பு

வேதாரண்யம் கோயில் தருமகர்த்தா **கேடிலியப்ப பிள்ளை** என்றால் ஊரெங்கும் நல்ல மதிப்புண்டு. அவர்

கல்வி கேள்வியுடன், கடவுளன்பும் அடியாரன்பும் மிக்கவர். அவர் கற்பிற் சிறந்த **கஜவல்லி யம்மையுடன்** நல்லறமான இல்லறந் தாங்கினர்; உள்ளத்தை இறைவனடியில் வைத்தார். அவர் தமையனார் வேதாரண்யம் பிள்ளை, மகவில்லாக் குறையால் வருந்தினர். கேடிலியப்ப பிள்ளை, தம் மைந்தன் சிவசிதம்பரத்தை அவருக்குத் தெத்துக் கொடுத்தார். இச்சமயம், திருச்சியில் ஆண்ட திருமலை நாயக்கர் பேரன் **விஜயரங்க சொக்கநாத நாயக்கர்** (1704—1731), கேடிலியப்ப பிள்ளையின் அறிவு, தெளிவு, திறமை, ஒழுக்கங்களைக் கேட்டு மகிழ்ந்து, அவரை வரவழைத்துப் பெரிய வேலை தந்து தமது வலக்கரம் போலப் போற்றினர்.

கேடிலியப்ப பிள்ளை மனைவியுடன், திருச்சி தாயுமானக் கடவுளை உருகி வழிபட்டு ஓர் அருள்மைந்தனை வேண்டினர். சிவனருளால் ஒரு ஞானச்சுடர் மைந்தன் அவதரித்தான்—**தாயுமானவன்.**

---

## 8. கல்வி, கேள்வி

கேடிலியப்பர், தமது அருமைக் குழந்தைக்கு ஆரியம், தமிழ் ஆகிய இருமொழியிலும் உள்ள அரிய ஞானநூல்களைப் பயிற்றினர். இலக்கணம், இலக்கியம், புராணம், இதிகாசம், திருமுறை நூல்கள், மெய்கண்ட சாத்திரங்கள் - இவையனைத்திலும் தாயுமானவர் தேர்ச்சிபெற்றார். எனினும், வெறும் புத்தகப் படிப்புமட்டும் அவரை மகிழ்விக்கவில்லை. கற்ற வழி நின்று சுயானுபூதி பெறவே அவர் மனம் துடித்தது.

உள்ளத்தி னுள்ளேதான் ஊறுஞ் சிவானந்த
வெள்ளந் துளைந்து விடாய்தீர்வ தெந்நாளோ ?

*என்று அவர் மனம் வேட்கையுற்றெழுந்தது. "அந்தோ, நான் நூல்களைப் படித்தென்ன பயன் ?*

கல்லாத அறிவுமேற் கேளாத கேள்வியுங்
        கருணைசிறி தேது மில்லாக்
காட்சியுங் கொலைகளவு கட்காம மாட்சியாக்
        காதலித் திடுநெஞ் சமும்,
பொல்லாத பொய்ம்மொழியும் அல்லாது நன்மைகள்
        பொருந்துகுண மேது மறியேன் ;
புருஷர்வடி வானதே யல்லாது கனவிலும்
        புருஷார்த்த மேது மில்லேன் ;
எல்லா மறிந்தநீ யறியாத தன்றெனக்
        கெவ்வண்ண முய்வண் ணமோ ?
இருளையிரு ளென்றவர்க் கொளிதார கம்பெறும் ;
        எனக்குநின் னருள் தாரகம்.
வல்லா னெனும்பெய ருனக்குள்ள தே ;யிந்த
        வஞ்சகனை யாள நினையாய் !
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
        மரபில்வரு மௌன குருவே !"

*என்று முறையிடுவார். கல்விச் செருக்கால் விளையும் பூசலும், வாதமும் கண்டு நோவார் :*

"கல்லாத பேர்களே நல்லவர்கள், நல்லவர்கள் ;
        கற்றுமறி வில்லாத என்
கர்மத்தை யென்சொல்வேன், மதியையென் சொல்லுவேன்!
        கைவல்ய ஞான நீதி,

நல்லோ ருரைக்கிலோ கர்மமுக் கியமென்று
நாட்டுவேன்; கர்ம மொருவன்
நாட்டினு லோபழைய ஞானமுக் கியமென்று
நவிலுவேன்; வடமொழி யிலே
வல்லான் ஒருத்தன்வர வுந்த்ரா விடத்திலே
வந்ததா விவக ரிப்பேன்.
வல்லதமி ழறிஞர்வரின் அங்ஙனே வடமொழியின்
வசனங்கள் சிறிது புகல்வேன்!
வெல்லாம லெவரையு மருட்டிவிட வகைதந்த
வித்தையென் முத்தி தருமோ?
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர் கணமே!

*இவ்வாறு வாய்வாதங்களை அவர் உள்ளம் வெறுத்தது. கேவலம் படிப்பு வல்லபத்தால் வார்த்தைகளைக் கொட்டி யளந்து, நடையில் மோசமாயிருக்கும் உலகைக் கண்டு இஞ்ஞானி மனங்கசிவார் :—*

மாறுபடு தர்க்கந் தொடுக்கவறி வார்சான்
வயிற்றின் பொருட்ட தாக,
மண்டலமும் விண்டலமும் ஒன்ருகி மனதுழல
மாலாகி நிற்க வறிவார்;
வேறுபடு வேடங்கள் கொள்ளஅறி வார்; ஒன்றை
மௌனமௌனன் றகம்வே றதாம்
வித்தையறிவார்; எமைப் போலவே சந்தைபோல்
மெய்ந்நூல் விரிக்க வறிவார்;
சீறுபுலி போற்சீறி முச்சைப் பிடித்துவிழி
செக்கச் சிவக்க வறிவார்;
திரமென்று தத்தம் மதத்தையே தாமதச்
செய்கைகொடும் உளற வறிவார்.

ஆறுசம யங்கடொறும் வேறுவே ருகிவிளை
யாடுமுனை யாவ ரறிவார் ?
அண்டபகி ரண்டமும் அடங்கவொரு நிறைவாகி,
யானந்த மான பரமே !

மூச்சைப்பிடித்து விழிபிதுங்கக் கும்பகம் செய்யும் ஹட யோகிகளையும் அவர் கண்டார்; பல மதவாதிகளையும் பார்த்தார்; அவர்களிடமிருந்து தனக்கு வேண்டிய ஞான சாதனம் எய்தாதென்று தெரிந்தார். எச்சமயத்திற்கும்இறைவனுன பரம்பொருளையே அவருள்ளம் கூவியழைத்தது.

---

## 9. ஞானத் தாகம்

இச்சமயம் தந்தை சிவனடி சேர்ந்தார். இளந் தாயுமானவனுடைய அறிவாற்றல்களைக் கண்ட சொக்கலிங்க நாயக்கர், தந்தையின் இடத்தில் மைந்தனை அமர்த்தினர்.

தாயுமானவர் காலத்தில் திருச்சி போர்க்களமா யிருந்தது; இன்றிருக்கும் நிலைமை நாளை இல்லை; தமிழர் நாடு நாயக்கர் ஆட்சியி லிருந்தது; நாயக்கர் அரசை நவாபின் படைகளும், மராட்டியப் படைகளும் முற்றுகை போட்டன. அரசியலில் நடக்கும் சூழ்ச்சிகளையும், போலி நடைகளையும் தாயுமானர் கண்ணுரக் கண்டறிந்தார்.

அவர் உள்ளம் அரச ஊழியத்தை விரும்பவில்லை. உலகின் பொய் நடைகளைக் கண்டு வெறுத்து, மெய் வழியை அவர் நாடினர் :

பொய்திகழும் உலகநடை யென்சொல்கேன், என்சொல்கேன் !
பொழுதுபோக் கேதென் னிலோ,
பொய்யுடல் நிமித்தம் புசிப்புக் கலைந்திடல்,
புசித்தபின் கண்ணு றங்கல் ;

கைதவம லாமலிது செய்தவம தல்லவே,
கண்கெட்ட பேர்க்கும் வெளியாய்க்
கண்டதிது, விண்டிதைக் கண்டித்து நிற்றலெக்
காலமோ, அதை யறிகிலேன்!
மைதிகழு முகிலினங் குடைநிழற் றிடவட்ட
வரையினெடு செம்பொன் மேரு
மால்வரையின் முதுகூடும் யோகதண் டக்கோல்
வரைந்துசய விருது காட்டி,
மெய்திகழும் அஷ்டாங்க யோகபூ மிக்குள்வளர்
வேந்தரே யுபசாந் தரே,
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர் கணமே!

*ஆசைத் தளையிற் சிக்கி, விடுதலை காணமல் அலையும் மாந்தர் நிலைமையை நம் மஹர்ஷி நன்கறிந்தார்:*

ஆசைக்கோ ரளவில்லை; யகிலமெல் லாங்கட்டி
யாளினுங் கடன் மீதிலே,
ஆணைசெல வேநினைவர். அளகேச நிகராக
அம்பொன்மிக வைத்த பேரும்,
நேசித்து ரசவாத வித்தைக் கலைந்திடுவர்.
நெடுநா ளிருந்த பேரும்,
நிலையாக வேயினுங் காயகற் பந்தேடி
நெஞ்சுபுண் ணுவர்; எல்லாம்,
யோசிக்கும் வேளையிற் பசிதீர வுண்பதும்
உறங்குவது மாக முடியும்.
உள்ளதே போதுநான் நானெனக் குளறியே
யொன்றைவிட் டொன்று பற்றிப்
பாசக் கடற்குளே வீழாமல், மனதற்ற
பரிசுத்த நிலையை யருள்வாய்,
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணனந் தமே!

கேவலம், உண்டுறங்கும் உலக வாழ்வை, அவர் குலசேக ராழ்வார் போலவே வெறுத்தார். போகச் சோம்பலை அருவருத்தார்; யோக சாதனத்தை விரும்பினுர்.

மின்னனைய பொய்யுடலை நிலையென்றும், மையிலகு
விழிகொண்டு மையல் பூட்டும்
மின்னுர்க ளின்பமே மெய்யென்றும், வளர்மாட
மேல்வீடு சொர்க்க மென்றும்,
பொன்னையழி யாதுவளர் பொருளென்று போற்றியிப்
பொய்வேட மிகுதி காட்டிப்
பொறையறிவு, துறவீதல் ஆதிநற் குணமெலாம்
போக்கிலே போக விட்டுத்
தன்னிகரி லோபாதி பாழ்ம்பேய் பிடித்திடத்
தரணிமிசை லோகா யதன்
சமயநடை சாராமல், வேதாந்த சித்தாந்த
சமரச சிவானு பூதி
மன்னவொரு சொற்கண் டெனைத்தடுத் தாண்டபின்
வாழ்வித்த ஞான குருவே,
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌன குருவே!

தாயுமானவரின் புலன்கள் அரசு ஊழியத்திலிருப்பினும் சிந்தை ஞான விசாரத்திலேயே யிருந்தது. உடலைத் தொழிலி லும், உள்ளத்தைச் சிவத்திலும் வைத்துவந்த தாயுமானவர், பரபரப்புடன் ஞான குருவைத் தேடினுர். இதோ ஞானகுரு வருகிறுர்! ஆர்வம் முற்றினுல் அருளாசான் எய்துவான்.

---

## 10. குரு தரிசனம்

ஒரு நாள், வழக்கப்படி நம் மஹரிஷி, தாயுமானக் கடவுளைத் தரிசிக்க மலைப்படியேறிச் சென்றுர்; அங்கே

தக்ஷிணாமூர்த்தி சந்நிதியில் வீற்றிருந்தார் ஒரு சிவராஜ யோகி; அவரே திருமூலர் மரபில் வந்த மௌனசுவாமிகள். அருட் காந்தம் இழுத்தது:

கானகம் இலங்குபுலி பசுவொடு குலாவுநின்
கண்காண; மதயானை நீ
கைகாட்ட வுங்கையால் நெகிடிக் கெனப்பெரிய
கட்டைமிக ஏந்தி வருமே,
போனகம் அமைந்ததென அங்காம தேனுநின்
பொன்னடியில் நின்று சொலுமே,
புலிராஜர் கவிராஜர், தவராஜ னென்றுனைப்
போற்றிசய போற்றி யென்பார்!
ஞானகரு ணகர முகங்கண்ட போதிலே
நவநாத சித்தர்க ளுமுன்
நட்பினை விரும்புவார், சுகர்வாம தேவர்முதல்
ஞானிகளும் உனைமெச் சுவார்.
வானகமும் மண்ணக மும் வந்தெதிர் வணங்கிடுமுன்
மகிமையது சொல்ல எளிதோ?
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌன குருவே!

யோகியின் அடி பணிந்து வணக்கமுடன் அவர் முன்னின் றார் தாயுமானவர். அன்புக் கனியை ஆசான் அருள்விழி யால் பார்த்தான். அன்பன் ஆசானைத் தொடர்ந்து ஒரு தனியிடஞ் சேர்ந்தான். பக்குவமறிந்து திருவடி தீக்ஷை செய்து, அன்பனை ஆண்டுகொண்டார் மோன குரு. கையில் வைத்திருந்த சிவஞான சித்தியாரைக் காட்டி அதன்வழி பற்றச் சொல்லி, சிவத்துடன் இரண்டறக் கலந்துநிற்கும் சிவாத்துவித நெறி காட்டி, மெய்கண்ட சாஸ்திரங்களின் உண்மையை விளக்கி, "அன்ப! சிறிது

காலம் நீ இல்லறத்திலிருந்து, ஒரு புதல்வனையும் பெற்றபின், நாம் வந்து உனக்கு நிட்டை கூட்டுவோம். நாம் வருவ துறுதி; சும்மா இரு!" என்று அவர் சொல்லிப் போந்தார். பிடித்தது ஞானத்தீ; "ஆசைக் கட்டை உதறி, ஆங்கார மூளையை ஏற்றி, அத்துவித மதங்கொண்டு, அலையும் மனத்தை யுண்டு, சின்முத்திராங்குசக் கைபிலடங்கும் ஒரு ஞான மத்தகசம்போல, என்னை வளர்த்தாய்! உடலே பொருளே, பெண்டிரே, போகமே என்று மயங்கும் உல காயதஞ் சாராமல், வேதாந்த சித்தாந்த சமரச சிவானு பூதியை ஒரு சொல்லா லுணர்த்தினை; இன்பதுன்பம் சமமா யுணர்ந்து, முத்திநெறி யறிய உன்னருளே எனக்குத் தாரகம்—மந்த்ர குருவே! யோக தந்த்ர குருவே! மூலன் மரபில் வரு மௌன குருவே!"

ஆங்கார மானகுல வேடவெம் பேய்பாழ்த்த
ஆணவத் தினும் வலிதுகாண்;
அறிவினை மயக்கிடும்; நடுவறிய வொட்டாது;
யாதொன்று தொடினும் அதுவாய்த்
தாங்காது மொழிபேசும்; அரிகரப் பிரமாதி
தம்மோடு சமான மென்னும்;
தடையற்ற தேரிலஞ் சுருவாணி போலவே
தன்னிலசை யாது நிற்கும்;
"ஈங்கா ரெனக்குநிகர்?" என்னப்ர தாபித்
திராவனு கார மாகி,
இதயவெளி யெங்கணுந் தன்னரசு நாடுசெய்
திருக்கும்இத னுடெந் நேரமும்
வாங்காவிலா அடிமை போராட முடியுமோ?
மௌனுப தேச குருவே!
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌன குருவே!

ஆசைநிக ளத்தினை நிர்த்தூளி படவுதறி
ஆங்கார முளையை யெற்றி,
அத்துவித மதமாகி, மதம்ஆறும் ஆருக
அங்கையின் விலாழி யாக்கிப்
பாசஇருள் தன்னிழ லெனச்சுழித் தார்த்துமேல்
பார்த்துப் பரந்த மனதைப்
பாரித்த கவளமாய்ப் பூரிக்க வுண்டுமுக
படாமன்ன மாயை நூறித்
தேசுபெற நீவைத்த சின்முத்தி ராங்குசச்
செங்கைக் குளே யடக்கிச்
சின்மயா னந்தசுக வெள்ளம் படிந்துநின்
திருவருட் பூர்த்தி யான
வாசமுறு சற்சார மீதென்னை யொருஞான
மத்தகஜ மென வளர்த்தாய்
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌன குருவே!

என்று தம் குருதேவனை நினைந்துருகிச் சும்மா இருக்கும் சூட்சுமத்தைக் கருதியிருந்தார் தாயுமானவர்.

---

## 11. விடுதலை

ஆத்ம சுகத்தை அவாவி மேலேறும் அன்பனுக்கு உத்தியோகமும், அரசர் சலுகையும், உலக சுகபோகமும் பிடிக்குமா? தன்னைச் சுற்றியுள்ள சுகபோக வாழ்வின் வெறுமையை நம் ஞானி அறிந்தார்:

கொந்தவிழ் மலர்ச்சோலை நன்னிழல் வைகினும்,
குளிர்தீம் புனற்கை யள்ளிக்
கொள்ளுகினும், அந்நீ ரிடைத்திளைத் தாடினும்
குளிர்சந்த வாடை மடவார்

வந்துலவு கின்றதென முன்றிலிடை யுலவவே
வசதிபெறு போதும், வெள்ளை
வட்டமதி பட்டப் பகற்போல நிலவுதர
மகிழ்போதும், வேலை யமுதம்
விந்தைபெற அறுசுவையில் வந்ததென அமுதுண்ணும்
வேளையிலும், மாலை கந்தம்
வெள்ளிலை யடைக்காய் விரும்பிவேண் டியவண்ணம்
விளையாடி விழி துயிலினும்,
சந்ததமு நின்னருளை மறவா வரந்தந்து
தமியேனை ரக்ஷை புரிவாய் !
சர்வபரி பூரண அகண்டதத் துவமான
சச்சிதா னந்த சிவமே !

*இவ்வாறு, பொருள்வரம் வேண்டாது அருள்வரமே அவர் வேண்டினுர்.*

புத்தமிர்த போகமுங் கற்பகநன் னீழலிற்
பொலிவுற இருக்கு மியல்பும்,
பொன்னுலகில் அயிராவ தத்தேறு வரிசையும்,
பூமண்ட லாதிக் கமும்,
மத்தவெறி யினர்வேண்டு மாலென்று தள்ளவும்எம்
மாலுமொரு சுட்டு மறவே,
வைக்கின்ற வைப்பாளன் மௌனதே சிகனென்ன
வந்தநின் னருள் வாழிகாண் !
சுத்தபரி பூரண அகண்டமே, ஏகமே,
சுருதிமுடி வான பொருளே !
சொல்லரிய வுயிரினிடை யங்கங்கு நின்றருள்
சுரந்துபொழி கருணை முகிலே,
சித்திநிலை முத்திநிலை விளைகின்ற பூமியே,
தேடரிய சத்தாகி யென்
சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே,
தேசோ மயா னந்தமே !

அரசன், அடியார் நேசமும், அரன் அன்பும் கொண்டவன்; ஆதலால் இப்பரம ஞானியின் பரிபக்குவத்தை அறிந்தான். "சுவாமீ! தங்களுக்கு இந்த அரச ஊழியத் தொல்லை வேண்டா; இது தங்களுக்கு மிகவும் தாழ்வு. தாங்கள் ஞானநிலையில் இருங்கள்! தங்களுக்கு வேண்டும் பணி விடைகளைச் செய்து யானும் நலம் பெறுகிறேன்" என்றார் **சொக்கநாத நாயக்கர்**. அரசன், காவிரிக் கரையில் தவ நிலயம் அமைத்தான்; தாயுமான மஹரிஷி அதில் எழுந்தருளி ஞானசாதனம் புரிந்தார். புவியரசன் இந்தத் தவ ராஜருக்கு அன்புடன் வேண்டிய பணிவிடைகள் செய்தான். தாயுமானர் உள்ளம்,

ஐவகை யெனும்பூத மாதியை வகுத்ததனுள்
அசரசர பேத மான,
யாவையும் வகுத்துநல் லறிவையும் வகுத்துமறை
யாதிநூ லையும் வகுத்துச்
சைவமுத லாமளவில் சமயமும் வகுத்துமேற்
சமயங் கடந்த மோன
சமரசம் வகுத்த நீ யுன்னைநான் அணுகவுந்
தண்ணருள் வருக்க விலையோ?
பொய்வளரு நெஞ்சினர்கள் காணாத காட்சியே,
பொய்யிலா மெய்ய ரறிவில்
போதபரி பூரண அகண்டிதா காரமாய்ப்
போக்குவர வற்ற பொருளே,
தெய்வமறை முடிவான பிரணவ ஸ்வரூபியே
சித்தாந்த முத்தி முதலே,
சிரகிரி விளங்கவரு தக்ஷிணா மூர்த்தியே,
சின்மயா னந்த குருவே!

என்றவாறு தெய்வ சாக்ஷாத்காரத்தை விரும்பியது.

## 12. அகிலாண்டேசுவரி

குளிர்காலம்; அரசன் தாயுமானருக்கு விலையுயர்ந்த ஒரு கம்பளிப் போர்வை யளித்து, 'சுவாமிகள் இதனை அணியவேண்டும்' என்ருன். தாயுமானர் புன்னகையுடன் அதை வாங்கினர். அப்போது, அங்கே ஒரு திருக்குலக் கிழவி குளிரால் நடுங்கிக்கொண்டிருந்தாள். "அம்மா இந்தா, போர்த்துக்கொள்!" என்று அப்போர்வையை அக் கிழவிக்குத் தந்தார் ஞானி. "இதென்ன, நான் தங்களுக்குத் தந்ததை அந்தப் புலைச்சியிடம் தந்தீர்? எனது கொடையை அவமதிப்பதா?" என்று மன்னன் மனங் கசந்தான். "அரச, நான் **அகிலாண்டேசுவரிக்கல்லவா இப்போர்வையைத் தந்தேன்**" என்று புன்னகை புரிந்து மௌனமானர் ஞானி. இந்தச் சமரசச் சுடரை மன்னன் அடிபணிந்து சென்ருன்.

கண்ணிற் காண்பதுன் காட்சி; கை யாற்ருெழில்
பண்ணல் பூசை; பகர்வது மந்திரம்;
மண்ணே டைந்தும் வழங்குயிர் யாவுமே
அன்ன லேநின் அருள்வடி வாகுமே!

என்ற சர்வாத்ம தரிசனத்தில் ஆழ்ந்திருந்தார் தாயுமானர்.

---

## 13. விஜயரங்க முடிவு

விஜயரங்க சொக்கநாதன் பாண்டி நாட்டைத் திருச்சியிலிருந்து 26-ஆண்டுகள் ஆண்டான் (1704-1731). பாட்டியாகிய மங்கம்மாளின் தாராள ஈகையும், கருணை

யும், தெய்வ பக்தியும், தரும சிந்தனையும் அவனுக்கிருந்தன. ஆனால், அவன் சுகபோகச் சோம்பேறியா யிருந்தான்.

அரசனொருவனுக்குரிய, வீரமும், தைரிய லக்ஷ்மியும் அவனிடமில்லை. சுற்றிலும் போர்ப்பேய்களும், பகைப்புயலும் சண்ட தாண்டவமார்டும் அக்காலம், தோளையுயர்த்தி வாளைத் தீட்டிப் படைகளைத் திரட்டி வைத்துக் கொள்ளாத மன்னன் வீழ்ச்சிபெறுவான். திருச்சி—மதுரையை மராட்டியரும், துருக்கரும் நாடோறும் குறிவைத்து, அடிக்கடி படையெடுத்து வந்தனர். புதுவைத் தொண்டைமான் சொக்கநாதனுக்குத் துணைபுரிந்து திருச்சியைக் காத்தான். எனினும், 1731-ஆம் ஆண்டு வலுத்த பகைவர் திருச்சியைச் சூழ்ந்தனர். அவர்களை எதிர்க்க வலுவில்லாத சொக்கநாதன் பாசறையிலேயே மார்படைத் திறந்தான். அவனுக்குப் பிள்ளையில்லை. அவனுடைய இராணி மீனாட்சி பட்டம் வகித்தாள்.

---

## 14. மீனாட்சி காதல்

சொக்கநாதன் இறந்தபிறகு, தாயுமானவர் தனது நன்றியைக்காட்ட அரசியலில் இராணிக்குத் துணைபுரிந்தார்; இந்த ஞானச்சுடரின் அழகும், எழிலும், அறிவும், திருவும், இன்சொல்லும், இளமையும், ஆற்றலும், வனப்பும் இளம் அரசியின் உள்ளத்தைக் கொள்ளைகொண்டன. வியப்பு அன்பானது, அன்பு ஆசையானது, ஆசை காதலானது, காதல் காமமானது; "இந்த வாலிபனை எப்படியாவது கூடி வாழவேண்டும்" என்று அவள் பாசம் துடித்தது. அரசி தனது குறிப்பைக் குறிப்பாக உணர்த்தினள்;

"காமனை 'வா' என்றிருண்ட கண்வலையை வீசுமின்னார்
நாமம் மறந்தருளை நண்ணுநா ளெந்நாளோ ?"

என்று முறையிடும் அவர் மனமா பெண்வலையிற் சிக்கும்? இராணியின் ஆசை கரை கடந்தது; அவள், தன் உடல், பொருள், ஆவி, அரசுரிமை யெல்லாம், தான்கொண்ட காதலுக்கு அடைக்கலமாக்கி முன்னின்றாள்; தன் எண்ணத்தையும் வெளிப்படையாகக் கூறினாள். மாதரை யெல்லாம் அகிலாண்டேசுவரியாகக் காணும் உள்ளமோ இம்மாய வலையிற் சிக்கும்?

அவர் மனம் மாதர்புறவழகில் மயங்கவில்லை; அவருட் கோயில் கொண்ட உலகன்னையையே கண்டது. இருப்பினும், மீனாட்சி அரசி; தன் ஆட்சிக் குட்பட்ட ஒரு வாலிபனை அவள் என்ன வேண்டுமானாலும் செய்யத் திறனுண்டு.

வாளாருங் கண்ணியர் மோகம்—யம
வாதைக் கனலை வளர்க்கும்மெய் யென்றே
வேளான் அவனுமெய் விட்டான்—என்னில்
மிக்கோர் துறக்கை விதியன்றோ தோழி!

என் றுறுதி கொண்டார் ஞானி; அரசிக்கு இத முரைத்தார்; ஓர் இரவில் ஊரைத் துறந்து, தேவையம்பதி யென்னும் இராமேசுவரத்தை யடைந்தார்.

---

## 15. உமை விளக்கம்

அங்கே மலைவளர் காதலியை மனமுருகப் பாடினார் தாயுமானவர் :—

பதியுண்டு, நிதியுண்டு, புத்திரர்கள், மித்திரர்கள்
பக்கமுண் டெக் காலமும்,
பவிசுண்டு, தவிசுண்டு, திட்டாந்த மாகயம
படரேனுந் திமிர மனுகாக்
கதியுண்டு, ஞானமாங் கதிருண்டு, சதிருண்டு
காயசித் திகளு முண்டு ;
கறையுண்ட கண்டர்பால் அம்மைநின் தாளில்
கருத்தொன்றும் உண்டாகு மேல்,
நதியுண்ட கடலெனச் சமயத்தை யுண்டபர
ஞானவா னந்த வொளியே
நாதாந்த ரூபமே, வேதாந்த மோனமே,
நானெனும் அகந்தை தீர்த்தென்
மதியுண்ட மதியான மதிவதன வல்லியே,
மதுசூ தனன் தங்கையே,
வரைராச னுக்கிருகண் மணியாய் உதித்தமலே
வளர்காத லிப்பெண் உமையே !

பூதமொடு பழகிவளர் இந்திரிய மாம்பேய்கள்,
புந்திமுத லான பேய்கள்,
போராடு கோபாதி ராக்ஷஸப் பேய்களென்
போதத்தை யூட ழித்து
வேதனை வளர்த்திடச் சதுர்வேத வஞ்சன்
விதித்தானிவ் வல்ல லெல்லாம்,
வீழும் படிக்குனது மௌனமந் த்ராதிக்ய
வித்தையை வியந் தருள்வையோ ?
நாதவடி வாகிய மஹாமந்த்ர ரூபியே
நாதாந்த வெட்ட வெளியே !
நற்சமய மானபயிர் தழையவரு மேகமே,
ஞானவா னந்த மயிலே,
வாதமிடு பரசமயம் யாவுக்கும் உணர்வரிய
மகிமைபெறு பெரிய பொருளே,

வரைராச னுக்கிருகண் மணியாய் உதித்தமலை
வளர்காத லிப்பெண் உமையே!

*அம்மையிடம் அவர் கேட்ட வரமென்ன?*

தெட்டிலே, வலியமட மாதர்வாய் வெட்டிலே
சிற்றிடை யிலே நடையிலே,
சேலொத்த விழியிலே, பாலொத்த மொழியிலே,
சிறுபிறை நுதற் கீற்றிலே,
பொட்டிலே, அவர்கட்டு பட்டிலே, புனைகந்த
பொடியிலே, அடியிலே, மேல்
பூரித்த முகையிலே, நிற்கின்ற நிலையிலே,
புந்திதனை நுழைய விட்டு,
நெட்டிலே யலையாமல், அறிவிலே, பொறையிலே
நின்னடியர் கூட்டத் திலே,
நிலைபெற்ற அன்பிலே, மலைவற்ற மெய்ஞ்ஞான
ஞேயத்திலே யுன் னிருதாள்
மட்டிலே மனதுசெல நினதருளும் அருள்வையோ
வளமருவு தேவை யரசே,
வரைராச னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்காதலிப் பெண் உமையே!

"நாதாந்த ரூபமே! வேதாந்த மோனமே! நானெனும் அகந்தை தீர்த்து, என் சிறு மதியையுண்ட மதிவதனவல்லியே! உன்னை நினைத்தால் எல்லாப் பேறும் உண்டாகும்; மாதர் விழியிலும், மொழியிலும், நடையிலும், கட்டிலும், பொட்டிலும் மயங்காது, உன் திருவடி மட்டிலே மனது செல்ல அருள்! சாண் கும்பியின் பொருட்டுச் செல்வர்க் குழைத்த தெல்லாம் வீணானது; இனியுன் தொண்டர் பணி புரியவருள்! அன்பர்பணியால் இன்பச்சுகமாம்" என்று வணங்கி யிருந்தார் தாயுமானவர்.

---

## 16. திருமணம்

ஆங்கிருக்கையில், தமையன் சிவசிதம்பரம் பிள்ளையும், சிறிய தாயார் மகன் அருளைய பிள்ளை யெனும் பேரன்பரும் வந்தனர்; "ஐயே! வருக; மரபுவிளங்க மணம்புரிக!" என்று வலியுறுத்தி வேதாரண்யத்திற்கு இட்டுச்சென்றனர். தம் குருமொழிக் கிசைந்து, தாயுமானவர் திருவும், நல்லொழுக்கமும் மிக்க மட்டுவார்குழலம்மையை மணந்து, தகுமுறை இல்லறவேள்வி நடத்தினார். கனகசபாபதி என்ற ஒரு பிள்ளைக்கனியை யீன்று மனைவி காலஞ்சென்றாள். தம் மகனைத் தாயுமானவர் அருமையாக வளர்த்துக் கல்விகேள்விகளில் நன்கு பயிற்றி, ஒரு தந்தையின் கடனை வழுவறச் செய்து குருவருளை நோக்கினார்.

உய்யும் படிக்குன் திருக்கருணை யொன்றைக் கொடுத்தால்
உடையாய், பாழ்ம்
பொய்யும், அவாவும், அழுக்காறும் புடைபட் டோடும்;
நன்னெறியாம்
மெய்யும் அறிவு பெறும்பேறும் விளங்கும்; எனக்குன்
னடியார்பால்
செய்யும் பணியுங் கைகூடுஞ் சிந்தைத் துயருந்
தீர்ந்திடுமே!

என்று திருவருளைச் சிந்தித்தார். சாதகன் பக்குவமறிந்து, மோனகுரு மீண்டுந் தோன்றினார். மஹரிஷி குருவைப் பணிந்தார்.

நியம லக்ஷணமும், இமய லக்ஷணமும்,
ஆச னுதிவித பேதமும்,

நெடிதுணர்ந் திதய பத்ம பீடமிசை,
நின்றி லங்குமச பாநலத்(து)
இய லறிந்துவளர் மூல குண்டலியை
இனிதி றைஞ்சியபவ ளருளினுல்,
எல்லை யற்றுவளர் சோதி மூலஅனல்
எங்கள் மோனமனு முறையிலே,
வயமிகுந்து வரும் அமிர்த மண்டல
மதிக்குளே மதியை வைத்துநான்,
வாய்மடுத் தமிர்த வாரியைப் பருகி
மன்னு மாரமிர்த வடிவமாய்ச்
செயமி குந்துவரு சித்த யோகநிலை
பெற்று ஞானநெறி யடைவனே ?
தெரிவ தற்கரிய பிரமமே, யமல
சிற்சு கோதய விலாசமே !

இத்தகைய ஞானநிட்டையை அவர் அவாவினுர்.

"அன்ப, நின் மனம் பழுத்தது ; இனித் துறவுகொள் வாய் !" என்று முறைப்படி துறவற மீந்து, குருதேவர் சிவஞானபோத முரைக்கலானுர்.

---

## 17. சிவஞான போதம்

அன்பனே, பலவாக மாறிமாறி இயங்கும் உலகை இயக்கும் ஒருவன் உண்டு. அவன் காலதேசக் கட்டுக ளற்ற சாட்சியாவன் ; ஆக்காதாக்கி, நோக்காது நோக்கித் தாக்கற் றிருக்கும் சமர்த்தன் ; எல்லாமாய், அல்லனுமாய், உயிர்க்குயிராய், உள்ளபடி யுள்ளவன். கதிர்கள் மூலம் கதி ரவனின் ஒளியும் சூடும் பரவுகின்றமைபோலவே, தன் பராசக்தி, அருள்வல்லமை, ஆணைமூலம் ஐந்தொழிலும்

புரிந்து, பார்க்கு மிடந்தோறும் நீக்கமற நிற்கும் பரிபூர ணனந்தனாக இறைவன் இருக்கிறான்; அவனுக்கு ஒப்புயர் வில்லை. அகரமின்றி அக்ஷரமில்லை; அவனருளின்றி அகிலமில்லை. பாட்டும் ஒலியும், பழமும் சுவையும், பாலும் வெண்மையும், எள்ளும் எண்ணெயும் போன்று, ஆண்ட வன் ஆன்மாக்களுடன் கலந்துள்ளான். அவன் சந்நிதி மாத்திரத்தில் எல்லாம் நடக்கும்; வினைப்பயன் விளையும். பரம்பொருளை, வேதம் அது என்னும்; சாக்தம் அவள் என்னும்; பிறசமயங்கள் அவன் என்னும்; சைவம் இம் முப்பெயர்களாலும் அவனை வணங்கும்; அவன் ஒருவன்; அவனது அருளான சக்தி ஒருத்தி; அதுவாகிய உலகம் சக்தி விலாசமே; பரம்பொருள் ஆணுமாவான், பெண்ணுமாவான், இரண்டுமற்றது மாவான்; இவற்றைக் கடந்த ஓர் அருவுமாவான். இறைவன் சக்தியால், மாயையினின்று உலகம் தோன்றி, இயங்கி, மாறி, யடங் கித் தோன்றி நின்றியங்கும்; இருவினைப் பயனால் உலகுயிர் கள் போக்குவரவு செய்யும்; வல்லான் வகுத்ததே வாய்க் கால். அவனாணைப்படி அனைத்தும் நடக்கும். ஆன்மாக் களின் உள்ளத்திற் கலந்தும், இறைவன், தானே தானாகத் தோய்வற் றிருக்கிறான்; ஒரு வயல் விகாரமின்றி யிருக்கி றது; அதிற் பலவகைப் பயிர்கள் விளைகின்றன. அது போல, அவன் சந்நிதி மாத்திரத்தில் விதைத்த வினையால் பயன் விளைகிறது. நெல்லில் உமிபோல, செம்பிற் களிம்புபோல ஆன்மாக்களை ஆணவம், மாயை, கன்ம மென்னும் மூன்று தளைகள் பற்றிநிற்கும். பாம்பு தோலுரிவதுபோல, ஆன்மா இவ்வினையுடல் விடுத்து, சூக்கு மத்துடன் சென்று வேறுடலிற் புகும்.

'எனதுடல்' எனும்போது இவ்வுடலை யான் உடை யேன் என்பதாயிற்று; அந்த யான் யார்? அஃது ஆன்மா;

அஃது உணர்த்தவே பொறிபுலன் கரணங்கள் எல்லாம் உணர்கின்றன; இவ்வுடல் மாயா யந்திரம்; உடல், கருவி கரணங்களை அன்றென நீக்கிக் கண்டவிடத்தில், ஓர் அறிவாக ஆன்மாவுள்ளது; கதிரொளியின்றிக் கண்ணுடி முகங் காட்டாது; இறைவ னருளின்றி ஆன்மா இயங் காது; அமைச்சுடன் கூடி ஆட்சி செய்யும் அரசனைப் போல, ஆன்மா அந்தக்கரணங்களுடன் கூடி விழிப்பு, கனவு, மறதி, துரியம், துரியாதீதம் என்னும் ஐந்து அவத்தையுட்படும்; காலம் கதிரவனுடன் கூடி, நாள், பருவம், நாழிகை இவற்றைக் காட்டினும், அது தனியே யுள்ளது; அதுபோல, ஆன்மா கருவி கரணங்களுட னியங்கியும் தனித்துள்ளது.

காந்தங் கண்ட இரும்புபோல, முதல்வன் முன்னிலை யில் உயிர்கள் உணர்வற் றியங்கும். கதிரொளியில் இலய மாகும் விண்மீன்கள் போல, உயிர் விளக்குகள் பரஞ்சுட ரில் அடங்கும். திருவருள் தாரகமாய் நின்றே ஆன்மா தன்னை யறிதலாம். ஆன்மா சதசத்து. இறைவன் அன்னியமின்றி ஆன்மாக்களுடன் கூடியிருக்கிருன். மண்ணும் புனலும், கடல்நீரும் உப்பும் போலப் பதி யுள்ளபோதே பசுவுண்டு. (என்று நீ அன்று நான்—உன்ன டிமை.) ஐம்புல வேடருடன் கூடிநின்று வளர்ந்து ஆன்மா தனது உண்மையை மறந்தது; சரியை கிரியை யோகப் பயனுல் இறைவன் குருவடிவாக வந்து அறிவிக்க, ஆன்மா புலவேடரை நீங்கித் தன்னை யறிந்து அரன்கழ லடையும்; ஊனக்கண் பசுபதியைக் காணுது. ஞானக் கண்ணுல் சிந்தை அவனை நாடினுல் பாசம் விலகும்; மாயக் கானலில் வெந்து நொந்த உயிர், இறைவன் தண்ணடி நிழல் சேரும். உள்ளத்தில் உள்ள இன்பப் பொருளை, சிவனை, சிவாயநம

என்ற ஐந்தெழுத்தால் உள்ளே வணங்குக! உள்ளம் ஒரு தாமரை; 24-இயற்கைத் தத்துவங்களும் அதன் காம்பு; வித்யா தத்துவங்கள் ஏழும் சுத்த வித்தையும் கூடி எட்டு இதழ்கள். ஈச்வர சாதாக்கிய தத்துவங்கள் 64-கேசரங்கள்; சக்திக்கலை 25-ம் அக்கேசரங்களுக்குள் பொகுட்டு. சிவ தத்துவம் அப்பொகுட்டிற் பதிந்த 51-விதை.

உயிர்க்குயிராய் நிற்கும் அவனுடன் ஒன்றி, அவ்விறைவன் அருள் வழியில் நின்று, நானென்னும் ஆணவத்தை அவனுக்கு முற்றும் ஊணுக்கி, அவனன்றி அன்னியங் காணுது சிவோஹம் பாவனை செய்க! நாம் அவனுடைமை யாவோம்; பிறகு மூவ்வினைக் கட்டில்லை; செம்பு பொன்னுகும். அத்தகைய சிவனடியார் புலனுலகில் கலந்திருந்தும், பொற்கலம் போலக் களிம்புருர்; ஐம் புலன்களிற் பற்றுர். பிறகு கதிரவன்முன் இருள் போலப் பாசவினை ஓடிப்போம்; **சுத்தான்மா,** அவனன்றித் தான் இல்லை என்னும் அத்துவித நிலைபெற்று, அயரா அன்பினுல் அரன் கழல் செல்லும்; இவ்வாறு அழுக்கற்று சிவானுபூதி பெற்ற சுத்தான்மா, அன்பு செய்யும் ஞானியருடன் கூடி, மயக்க மற்று, எங்கும் சிவமயங் கண்டு, ஆருயிர்களை நடமாடுங் கோயில்களாகக் கண்டு, அவ்வாலயங்களை அரனெனப் பணியும்; தன்னுள் அவனையறிந்து, 'அதுஇது' என்னுது, எல்லாம் சிவமயமாகக் காண்பதே உயர்ந்த ஞான சித்தியாம். 'எனது செயல் நினது செயல்; நினையன்றி யானில்லை; என்று நீ, அன்று நான்; நீ எங்கும் நிறைந்த சோதி, சுகவாரி' என்ற அனுபவமே மெய்கண்ட தத்துவம் என் றுபதேசித்து அன்பனுக்கு நிட்டைகூட்டிச் **சும்மா இருத்தினுர்** மோன குரு. தாயுமானவர் சகசநிலை பெற்றுர்:

கருமருவு குகையனைய காயத்தி னடுவுட்
கனிம்புதோய் செம்பனைய யான்,
காண்டக இருக்கநீ, ஞானவனல் மூட்டியே
கனிவுபெற வுள்ளு ருக்கிப்
பருவம தறிந்துநின் னருளான குளிகைகொடு
பரிசித்து வேதி செய்து,
பத்துமாற் றுத்தங்க மாக்கியே பணிகொண்ட
பக்ஷத்தை யென்சொல் லுவேன்!
அருமைபெறு புகழ்பெற்ற வேதாந்த சித்தாந்தம்
ஆதியாம் அந்த மீதும்
அத்துவித நிலையராய் என்னையாண் டுன்னடிமை
யானவர்கள் அறிவி னூடுந்
திருமருவு கல்லா லடிக்கீழும் வளர்கின்ற
சித்தாந்த முத்தி முதலே,
சிரகிரி விளங்கவரு தக்ஷிணா மூர்த்தியே
சின்மயா னந்த குருவே!

இவ்வாறு சிவ குருவை இறைஞ்சினர் மஹரிஷி.

பிறகு அனைத்தையுந் துறந்து, சகச நிட்டையுடனே காஞ்சி, சிதம்பரம், அருணகிரி, ஆரூர், மதுரை முதலிய சிவத் தலங்கள் தோறும் சென்று ஆங்காங்குப் பாமலர் வழி பாட்டுடன் அருஞ் செயல்களும் புரிந்தார்.

---

## 18. சதாசிவ தரிசனம்

இப்போது நாயக்கர் ஆட்சி ஒய்ந்தது; இராணி மீனாட்சி, மதுரையில் நஞ்சுண் டிறந்தாள். சந்தாசாஹேபு பாண்டி நாட்டைக் கைப்பற்றினன்.

இக்காலந்தான் மோனி சதாசிவ பிரமேந்திரர் நாடெங்கும் அவதூதராகத் திரிந்தார். 1738-ல் அவர் திருச்சிக்கு வந்தார். புதுவைத் தொண்டைமான் காவிரிமணலில் அவரைத் தரிசித்து, தக்ஷிணாமூர்த்தி மந்திரமும் பெற்றார்.

இச்சமயமே தாயுமான மஹரிஷியும், சதாசிவ முனிவரைத் தரிசித்தார். சித்தாந்த முத்திபெற்ற மஹரிஷி முனிவரின் வேதாந்த முத்தியைக் கண்டார்;

ஆனந்த மானநின்னை அன்றியொன்றை யுன்னாத
மோனந் தமியேற்கு முத்தி பராபரமே.

என்றுருகினார்; பிறகு இராமேசுவரம் சென்றார்.

---

## 19. மழை பெய்தது

இராமேசுவரத்தில் வான்வறட்சியால் மக்கள் வருந்தினர்; ஆருயிர்க் கருணைமிக்க ஞானவள்ளல்,

சைவ சமயஞ் சமயமெனில், அச்சமயத்
தெய்வம் பிறைசூடுந் தெய்வமெனில்—ஐவரைவென்(று)
ஆனந்த வின்பி லழுந்துவது முத்தியெனில்,
வானங்காள், பெய்மின் மழை!

என் றிசைக்கவே, பெருமழை பெய்தது; ஊர் செழித்தது.

## 20. இன்ப நிட்டை

இராமநாதபுரம், இலக்ஷ்மி நகரத்தில், நம் மஹரிஷி தம் இறுதிநாட்களை இன்ப நிட்டையிற் கழித்தார்.

கூடுத லுடன்பிரித லற்றுநிர்த் தொந்தமாய்க்
குவிதலுடன் விரித லற்றுக்
குணமற்று, வரவினெடு போக்கற்று, நிலையான
குறியற்று, மலமு மற்று,
நாடுதலு மற்றுமேல் கீழ்நடுப் பக்கமென
நண்ணுதலு மற்று, விந்து
நாதமற் றைவகைப் பூதபே தமுமற்று,
ஞாதுருவின் ஞானமற்று,
வாடுதலு மற்றுமேல் ஒன்றற் றிரண்டற்று,
வாக்கற்று மனமு மற்று,
மன்னுபரி பூரணச் சுகவாரி தன்னிலே
வாய்மடுத் துண்ட வசமாய்த்
தேடுதலு மற்றவிட நிலையென்ற மௌனியே,
சித்தாந்த முத்தி முதலே,
சிரகிரி விளங்கவரு தக்ஷிணு மூர்த்தியே,
சின்மயா னந்த குருவே!

*இத்தகைய நிலையைப் பெற்றார் தாயுமானவர்.*

பாராதி யண்டங்கள் அத்தனையும் வைக்கின்ற
பரவெளியின் உண்மை காட்டிப்
பற்றுமன வெளிகாட்டி, மனவெளியி னிற்றோய்ந்த
பாவியேன் பரிசு காட்டி,
தாராள மாய்நிற்க நிச்சிந்தை காட்டிச்
சதாகால நிஷ்டை யெனவே
சகசநிலை காட்டினை, சுகாதீத நிலயந்
தனைக்காட்ட நாட் செல்லுமோ?
காரார என்னரும் அனந்தகோ டிகள்நின்று
காலூன்றி மழை பொழிதல்போல்,
கால்விசி மின்னிப் படர்ந்துபர வெளியெலாங்
கம்மியா னந்த வெள்ளஞ்

சோராது பொழியவே கருணையின் முழங்கியே
தொண்டரைக் கூவு முகிலே,
சுத்தநிர்க் குணமான பரதெய்வமே பரஞ்
சோதியே சுக வாரியே!

சகசநிலையை முன்பே பெற்ற தாயுமானவர், சுகாதீத நிலையும், பல சித்திகளும் பெற்றிருந்தார்.

---

## 21. மகா சமாதி

அருளையர், **கோடிக்கரைஞானியார்** என்ற இரு உண்மைச் சீடர் தாயுமானவருடன் எப்போதும் இருந்து பணி செய்தனர். ஒரு நாள் குரு தம் அருமைச் சீடருக்கு அரிய உபதேசஞ் செய்தார்:—"அன்பர்களே! இல்லறத்திலிருந்தும் மனமடக்கியோன் மகாயோகி; துறவறத்திலிருந்தும், மனக்குரங் கடங்கான் அறிவிலி; மனங் குவிக! சிந்தை யடக்கிச் சும்மாவிருத்தலே அட்ட சித்திகளினும் அரியதொரு சித்தி; எல்லா வுளத்தும் ஒரு பரமனே சுகநடம் புரிகிறான்; அவனன்றி யானில்லை எனும் அடைக்கலவுணர்ச்சி வரவேண்டும். திருவருளே தாரகமாக வாழுமின்; அல்லும் பகலும் அறிவா யிருமின்; அமைதி, உண்மை, இரக்கம், ஈகை, நடுநிலை இவற்றை வளர்மின்!

ஓராம லேயொருகால் உன்னுமல், உள்ளொளியைப்
பாராமல் உள்ளபடி பார்த்திருந்தால்—வாராதோ
பத்துத் திசையும் பரந்தெழுந்தா னந்தவெள்ளம்
தத்திக் கரைபுரண்டு தான்!

இவ்வா றருளிப் பேரின்ப நிட்டை கூடி, 1742-ஆம் ஆண்டு தைமீ பௌர்ணமி யன்று பரமாகாசத்திற் கலந்தார் சிவ ஞானப் பிரகாசரான மஹரிஷி தாயுமானவர்.

---

## 22. தாயுமானவர் தத்துவம்

தாயுமானவர் தன்னறிவுச் சுடர்; கருதரிய சிற்சபை உள்ளம்; அதில் அமுதநாடி துள்ளிக் குதிக்கிறது; அதுவே, சச்சிதானந்த சிவத்தின் இன்ப நடனம்; அதுவே அமைதி வெளி; ஆங்கே உபசாந்த தேவதை, நித்தியமாய், நீங்காச் சுத்தமாய், எல்லாம் வைத்திருந்த தாரகமாய், ஆனந்தமயமாய், சித்துருவாய், துரியநிறைவடிவாய், சுக வெளியாய் இலங்குகிறது; அப்பொருள் எல்லார்க்கும் பொது; அஃது உயிர்க்குயிரானது; மனம் மதிக் கெட்டாத பேரின்ப மயமானது:

தானுன தன்மயமே யல்லால் ஒன்றைத்
தலையெடுக்க வொட்டாது. தலைப்பட் டாங்கே
போனலுங் கர்ப்பூர தீபம் போலப்
போயொளிப்ப தல்லாது புகல்வே றின்றும்.
ஞானகா ரத்தினெடு ஞேய மற்ற
ஞாதுருவு நழுவாமல் நழுவி நிற்கும்.
ஆனலும் இதன்பெருமை யெவர்க்கார் சொல்வார்?
அதுவானல் அதுவாவர் அதுவே சொல்லும்.

மலரில் மணம், எள்ளில் எண்ணெய், உடலில் உயிர், கதிரில் ஒளிபோலக் கலந்து அனைத்தையும் தனது அருள் வல்லமையால் ஆக்கி, அளித்து, அழித்து, அடக்கித் தோற்றியும் ஆதியந்தங் காட்டாத முதலாய், மோனத்தில் விளங்கும் பால் வெளியாய், சோதியாய், எல்லாமாய், அல்லதுவாய், சங்கற்ப விகற்பம் தோயா அறிவாய், பசுபதியாய்ப் பரம் பொருள் விளங்குகிறது.

அங்கிங்கெ னுதபடி யெங்கும் ப்ரகாசமாய்
ஆனந்த பூர்த்தி யாகி,

அருளொடு நிறைந்ததெது? தன்னருள் வெளிக்குளே
அகிலாண்ட கோடி யெல்லாம்
தங்கும் படிக்கிச்சை வைத்துயிர்க் குயிராய்த்
தழைத்ததெது? மன வாக்கினில்
தட்டாமல் நின்றதெது? சமயகோ டிகளெலாந்
தந்தெய்வம் எந்தெய்வ மென்(று)
எங்குந் தொடர்ந்தெதிர் வழக்கிடவு நின்றதெது?
எங்கணும் பெரு வழக்காய்,
யாதினும் வல்லவொரு சித்தாகி யின்பமாய்
என்றைக்கும் உள்ள தெது? மேல்
கங்குல்பக லறநின்ற எல்லையுள தெது? அது
கருத்திற் கிசைந்த ததுவே!
கண்டனவெலாம், மோன வுருவெளிய தாகவுங்
கருதி யஞ்சலி செய்குவாம்!

*அப் பொருளைப் பல மதங்கள் பலவாறு பாவனைசெய்து பணிகின்றன :—*

அன்னே யனேயெனுஞ் சிலசமயம்; நின்னையே
ஐயா, ஐயா வென்னவே
அலறிடுஞ் சிலசமயம்; அல்லாது பேய்போல
அலறியே யொன்று மிலவாய்ப்
பின்னேது மறியாமல் ஒன்றைவிட் டொன்றைப்
பிதற்றிடுஞ் சில சமயமேல்,
பேசரிய வொளியென்றும், வெளியென்றும், நாதாதி
பிறவுமே நிலய மென்றுந்
தன்னேரி லாததோ ரணுவென்று, மூவிதத்
தன்மையாங் கால மென்றுஞ்
சாற்றிடுஞ் சிலசமயம், இவையாகி, வேறதாய்ச்
சதாஞான ஆனந்த மாய்
என்னே யெனேகருணை விளையாட் டிருந்தவா
றெம்மனோர் புகல எளிதோ?

இகபர மிரண்டினிலும், உயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்ற பொருளே !

அது குறைவற்ற நிறைவு ; அருமறையும் பேதமதங்களும் வாய்வாதமும் காணுதது ; மோனத்தில் உணர்வாவது ; வேத வர்ணனைக்கும் அப்பாலானது ; அது சர்வசாட்சி ; நிர்க்குணக் கடல் ; அஃது ஒன்று ; அருளாற் பலவாக விளையாடுகிறது ; தேனும், அமுதும், பாலும், கருப்பஞ்சாறும், பழரசமும் கலந்த இனிப்பினும் மிக்க அருட்கனிச்சுவை ; கன்ருய்க் கதறும் அன்பர்க்கு அது தாயன்புடன் கருணைமயமாய் வழங்கும் ; இடம் காலம் காரணம் கற்பனைகளைக் கடந்து, கருத்தினுட் கருத்தாய், காலம் தேசம் கருவி செயல் இவற்றை வகுத்து, உயிர்த்திரளை யாட்டும் உயிர்ப் பொருள் ; அதுவே எல்லாரும் வணங்கும் இயல்பு ; இயல்பென்றுந் திரியாத இன்பம் ; எல்லா மதத்தினர்க்கும், அறிஞரெல்லாருக்கும், அணிமாதி சித்தருக்கும், மோன மாதவர்க்கும், இந்திராதி போகநலம் பெற்றபேர்க்கும் இதுவே தாயகம் ; இதுவே சந்தான கற்பகம் ; இதுவே சன்மார்க்க ஞானத்தின் பொருள் ; இதுவே இருளையுண்ணும் இயலொளி ; தன்னை யறிந்தோரைக் கலந்து தானுக்குவது ; அது தானென தன்மயம் ; தானன்றி வேறற்றது ; அறிவான், அறிவு, அறிபொருள் ; காண்பான், கண், காட்சி என்னும் முப்புடி கடந்த அத்துவித நிலை அதுவே ; எல்லாச் சமயங்களும் அதன் விளையாட்டே.

வேறுபடுஞ் சமயமெல்லாம் புகுந்து பார்க்கின்,
விளங்குபரம் பொருளேநின் விளையாட் டல்லால்
மாறுபடுங் கருத்நில்லை, முடிவில் மோன
வாரிதியில் நதித்திரள்போல் வயங்கிற் றம்மா !

இந்த அற்புதப் பொருள் உன்னுள் உள்ளது; ஆனல் அதை ஆசை யாணவ மனத்திரை மூடிக்கொண்டிருக்கிறது; இந்த ஆணவமே ஒன்றைப் பலவாக்கி, மதியை மயக்கி, அல்லதைப் பற்றி அல்லல் விளைப்பது; இந்த ஆணவ மனத்தை வென்றாலேதான் உண்மை உதிக்கும்.

சினமிறக்கக் கற்றாலும் சித்தியெல்லாம் பெற்றாலும்
மனமிறக்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே?

சுகாரம்பப் பெருவெளியான உள்ளத்தானை அடைவ தெப்படி? குருமணி கூறுகிறார்:—

துள்ளுமறி யாமனது பலிகொடுத் தேன்; கர்ம
துஷ்டதே வதைக ளில்லை;
துரியநிறை சாந்ததே வதையாம் உனக்கே
தொழும்பன் அன் பபிஷேகநீர்;
உள்ளுறையில் என்னுவி நைவேத்தி யம்ப்ராணன்
ஓங்குமதி தூப தீபம்;
ஒருகால மன்றிது சதாகால பூசையா
வொப்புவித் தேன் கருணைகூர்!
தெள்ளிமறை வடியிட்ட அமுதப் பிழம்பே,
தெளிந்த தேனே சீனியே,
திவ்யரச மியாவுந் திரண்டொழுகு பாகே,
தெவிட்டாத ஆனந் தமே!
கள்ளன்அறி வூடுமே மெள்ளமெள வெளியாய்க்
கலக்கவந் நல்ல வுறவே,
கருதரிய சிற்சபையில் ஆனந்த நிர்த்தமிடு
கருணு கரக் கடவுளே!

இத்தகைய உள்வழிபாட்டால் கடவுளுறவிற் கலக்கவேண்டும். உடல் குழைய, என்புருக, விழிபெருக, மனங் கரைய இறைவனை ஆர்வமுடன் கூவவேண்டும்:—

அரும்பொனே, மணியே, என் அன்பே, என் அன்பான
அறிவே, என் அறிவி லூறும்
ஆனந்த வெள்ளமே யென்றென்று பாடினேன்;
ஆடினேன் நாடி நாடி;
விரும்பியே கூவினேன்; உலறினேன்; அலறினேன்:
மெய்சிலிர்த் திருகை கூப்பி,
விண்மாரி யெனவெளிரு கண்மாரி பெய்யவே
வேசற் றயர்ந்தே னியான்
இரும்புநேர் நெஞ்சகக் கள்வனு கிலும்உன்னை
இடைவிட்டு நின்ற துண்டோ?
என்றுநீ யன்றுநான்; உன்னடிமை யல்லனோ?
யாதேனும் அறியா வெறுந்
துரும்பனேன் என்னினுங் கைவிடுதல் நீதியோ?
தொண்டரோடு கூட்டு கண்டாய்;
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுக வாரியே!

இவ்வாறு, அருட்பொழிவிற்கும் அன்பர் கூட்டத்திற்கும் ஆர்வங்கொண்ட நல்லோரை இறைவன் ஆட்கொண்டு இன்ப மருளுவது உண்மை!

---

## 23. சேரவாரும் சகத்தீரே!

உலகீர், மானிடப்பிறவி வாய்த்தலரிது; கடவுளடைவே உடலின் பயன். மனத்தை அடக்கி, அன்பைப் பெருக்கி, அருளொளிபெற்று, இறைவனை யறிந்து கூடுமின்! இது தருணம்:

காடுங் கரையும் மனக்குரங்கு
கால்விட் டோட அதன்பிறகே
ஓடுந் தொழிலாற் பயனுளதோ?
ஒன்றாய்ப் பலவாய் உயிர்க்குயிராய்
ஆடுங் கருணைப் பரஞ்சோதி
யருளைப் பெறுதற் கன்புநிலை
தேடும் பருவம் இதுகண்டீர்
சேர வாருஞ் சகத்தீரே!

செகத்தீரே! பொய்ச் சமயங்களில் புகுந்துழல வேண்டா; உள்ளம் மன்று; அதில் இன்பவெளி யுள்ளது; அதைக் காணச் சேரீர்!

காக முறவு கலந்துண்ணக்
கண்டீர்; அகண்டா காரசிவ
போக மெனும்பே ரின்ப வெள்ளம்
பொங்கித் ததும்பிப் பூரணமாய்
ஏக வுருவாய்க் கிடக்கு தையோ;
இன்புற் றிடநாம் இனியெடுத்த
தேகம் விழுமுன் புசிப்பதற்குச்
சேர வாருஞ் சகத்தீரே!

இதுதான் தாயுமானக் கடல் முழக்கம். ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்சர் சித்தி யெல்லாம் பெற்றுக் காளிதேவி கோபுரத்தின் மீதேறி உலகை நோக்கி, "**வாருங்கள், என் குழந்தைகளே!**" என்றழைத்தார். ஏசுநாதர், "**எல்லாம் விடுத்து என் பின் வாருங்கள்!**" என்று சீடரை அழைத்தார். நம் மஹரிஷி, "இஃது அறிவு; இதோ இன்பப் பொருள்; அமுத வாரி; உலகீர்! சாதிமத வேற்றுமையின்றி எல்லாரும் உண்ணச் சேர்ந்து வாருங்கள்!" என்று மௌனமாக அழைத்துச் சென்றார்.

---

## 24. தாயுமானேபநிஷத்து

எவ்வுயிரு மென்னுயிர்போல் எண்ணி யிரங்கவுநின்
தெய்வ அருட்கருணை செய்யாய் பராபரமே! 1

எங்கெங்கே பார்த்தாலும், எவ்வுயிர்க்கு மவ்வுயிராய்
அங்கங் கிருப்பதுநீ யன்றோ பராபரமே? 2

என்போ லெளியவரும், எங்கெங்கே பார்த்தாலும்
உன்போல் வலியவரும் உண்டோ பராபரமே? 3

நெஞ்சமே கோயில்; நினைவே சுகந்தம்; அன்பே
மஞ்சனநீர்; பூசைகொள்ள வாராய் பராபரமே! 4

நீயின்றி நானுர்? நினைவார்? என் நெஞ்சகமார்?
தாயின்றிச் சூலுமுண்டோ சாற்றாய் பராபரமே! 5

எல்லாரு மின்புற் றிருக்க நினைப்பதுவே
அல்லாமல் வேறென் றறியேன் பராபரமே! 6

மாயா சகமிலையேல் மற்றெனக்கோர் பற்றுமில
நீயேநான் என்றுவந்து நிற்பேன் பராபரமே! 7

கண்ணுவா ரேனும்உன்னைக் கைகுவியார் ஆயின்அந்த
மண்ணுவார் நட்பை மதியேன் பராபரமே! 8

தன்னை அறிந்தருளே தாரகமாய் நிற்பதுவே
உன்னை அறிதற் குபாயம் பராபரமே! 9

ஆடுவதும், பாடுவதும், ஆனந்த மாகநின்னைத்
தேடுவதும் நின்னடியார் செய்கை பராபரமே! 10

என்னதுயான் என்னலற்றோர் எங்கிருந்து பார்க்கினுநின்
சன்னிதியாம் நீபெரிய சாமி பராபரமே! 11

படிப்பற்றுக் கேள்வியற்றுப் பற்றற்றுச் சிந்தைத்
துடிப்பற்றோர்க் கன்றோ சுகங்காண் பராபரமே! 12

உன்னுமனங் கர்ப்பூர வுண்டைபோ லேகரைய
மின்னும்ஆ னந்த விளக்கே பராபரமே! 13

நேசத்தால் நின்னை நினைக்கும் நினைவுடையார்,
ஆசைக் கடலில் அழுந்தார் பராபரமே! 14

எங்கனும்நீ யென்ருல், இருந்தபடி யெய்தாமல்
அங்குமிங்கும் என்றலைய லாமோ பராபரமே. 15

உள்ளத்தி னுள்ளே ஒளிந்திருந்தேன் கள்ளமெல்லாம்
வள்ளல்அறிந் தாலெனக்கு வாயுமுண்டோ பைங்கிளியே! 16

நானென தன்மை நழுவியே யெவ்வுயிர்க்குந்
தானென உண்மைதனைச் சாருநாள் எந்நாளோ? 17

எல்லையில்பே ரின்பமயம் எப்படியென் ருேர்தமக்குச்
சொல்லறியா ஊமர்கள்போற் சொல்லுநாள் எந்நாளோ? 18

உள்ளத்தி னுள்ளேதான் ஊறுஞ் சிவானந்த
வெள்ளந் துளைந்து விடாய்தீர்வ தெந்நாளோ? 19

செப்பரிய தன்கருணைச் சிற்சுகனுர் பூரணத்தில்
அப்பினிடை யுப்பாய் அணையுநாள் எந்நாளோ? 20

தூய அறிவான் சுகரூப சோதிதன்பால்
தீயில்இரும் பென்னத் திகழுநாள் எந்நாளோ? 21

ஓராமல், மந்திரமும் உன்னுமல், நப்பரனைப்
பாராமற் பார்த்துப் பழகுநாள் எந்நாளோ? 22

ஆவித் துணையே அருமருந்தே என்றனைநீ
கூவியழைத் தின்பங் கொடுத்தாற் குறைவாமோ? 23

காலால் வழிநடவுங் காலத்தே கண்மூளைத்தாற்
போலே யெனதறிவிற் போந்தறிவாய் நில்லாயோ? 24

ஞானமே வடிவாய்த் தேடுவார் தேடு
நாட்டமே, நாட்டத்துள் நிறைந்த
வானமே, யெனக்கு வந்துவந் தோங்கும்
மார்க்கமே, மருளர்தாம் அறியா
மோனமே, முதலே, முத்திநல் வித்தே,
முடிவிலா இன்பமே, செய்யுந்
தானமே, தவமே, நின்னைநான் நினைந்தேன்
தமியனேன் தனைமறப் பதற்கே. 25

முற்றுப் பெற்றது.

Printed at Shakti Press Ltd. (Shanti Press), Madras.

